உ

ஸ்ரீ குருப்யோ நம:

ஜயஜய சங்கர! ஹரஹர சங்கர!!

# இந்து மத விளக்கம்

## பித்ரு தர்ப்பண விதி



ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத வேத ஸபா,

திருவல்லிக்கேணி : : சென்னை-5.

1978] ஜூன் வெளியீடு [ஞானயக்ஞம்.

# இந்துமத விளக்கம்

## பாடம் 1. கடவுள்

"கடவுள் ஒருவரே! வழிபடத்தக்கவர் அவரே!"



கணபதி



சிவபெருமான்



முருகன்



நாராயணர்



சக்தி

I நமது மதத்தின் பெயர் என்ன?

இந்து மதம்.

II இந்து மதத்தின் கிளைமதங்கள் ஏவை?

சைவம், வைணவம், சாக்தம், காணுபத்தியம், கௌமாரம், வைரவம் முதலியனவாம்.

III ஒவ்வொரு சமயத்தினுடையவும் முக்கிய கடவுள் பெயர் கூறுக?

சைவம்-சிவபெருமான். வைணவம்-நாராயணர்
சாக்தம்—சக்தி. காணுபத்தியம்—கணபதி
கௌமாரம்—முருகன். வைரவம்—வைரவர்.

IV கடவுள் எப்படிப்பட்டவர்?

அவர் என்றும் உள்ளவர். எங்கும் நிறைந்தவர். குற்றம் ஒன்றும் இல்லாதவர். எல்லாம் அறிபவர் எல்லாம் செய்பவர். என்றும் மகிழ்ச்சியோடு இருப்பவர்; சுதந்திரர்.

V கடவுளுடைய தொழில்கள் எவை?

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என ஐந்தாம்.

VI படைத்தலாவது யாது?

உலகத்தைப் படைத்து, அதில் வாழும் உயிர்களுக்கு உடம்பு, கருவிகள், இடம், அநுபவம் இவற்றைக் கொடுத்தலாம்.

VII காத்தலாவது யாது?

உயிர்கள் வாழ்வதற்கு வேண்டிய எல்லாவற்றையும் அளித்துக் காப்பாற்றுதலாம்.

VIII அழித்தலாவது யாது?

படைத்துக் காத்தவை அனைத்தையும் ஒடுக்கி இளைப்பாறச் செய்தல் ஆகும்.

IX மறைத்தலாவது யாது?

உயிர்கள் செய்த புண்ணிய பாவங்களுக்குத் தக்க இன்ப துன்பங்களை அனுபவிக்கச் செய்தலாம்.

X அருளலாவது யாது?

உயிர்களின் குற்றம் நீக்கி குணத்திற்குத் தக்க உயர்பதம் உதவுதலாம்.

---

# பாடம் 2. சக்தி

"அருளது சக்தியாகும்!"

I கடவுள் ஐந்து தொழில்களையும் எதைக்கொண்டு செய்வார்?

தனது அருளாகிய சக்தியைக்கொண்டுசெய்வார்.

II சக்தியாவது யாது?

சூரியனில் ஒளி போலவும், தீயில் சூடு போலவும் இறைவனோடு சேர்ந்து நிற்கும் வல்லமை சக்தி எனப் படும்.

III சக்தி எத்தனை வகைப்படுவர்?

ஆதிசக்தி, பராசக்தி, மனோன்மணி, மகேஸ்வரி, உமாதேவி, இலக்ஷிமிதேவி, சரஸ்வதி தேவி என பல வகைப்படுவர்.

IV கடவுள் அம்மை அப்பராக ஆண், பெண் வடிவில் இருப்பது எதற்கு?

உயிர்கள் எல்லாம் ஆண், பெண் வடிவில் இருந்து வாழ்வதற்காக அவரும் ஆண், பெண் வடிவில் அம்மை அப்பராய் இருக்கிறார்.

V பரமேசருடைய சக்தி யார்? பராசக்தி.

VI மகேசுரனுடைய சக்தி யார்? மகேஸ்வரி.

VII நாராயணருடைய சக்தி யார்? இலக்ஷிமிதேவி.

VIII பிரம தேவரின் சக்தி யார்? ஸரஸ்வதி.

IX முருகனுடைய மனைவியர் யாவர்?

வள்ளி, தெய்வயானை எனும் இருவர்.

X நடராஜருடைய மனைவி யார்?

சிவகாமி அம்மையார்.

---

## பாடம் 3. உயிர்கள்

I உயிர்கள் எத்தனை வகைப்படும் ?

முட்டையில் தோன்றுவன ; வேர்வையில் பிறப்பன ; வித்து, வேர் முதலியவற்றில் தோன்றுவன ; கருப்பையில் பிறப்பன என நான்கு வகைப்படும்.

II முட்டையில் தோன்றுவன சில கூறுக ?

கோழி, குருவி, பாம்பு, மீன் முதலியன.

III வேர்வையில் பிறப்பன எவை ?

பேன், கிருமி முதலியன.

IV வித்து, வேர் முதலியனவற்றில் தோன்றுவன யாவை ?

மரம், செடி கொடிகள்.

V கருப்பையில் பிறப்பன யாவை ?

மனிதர் விலங்கு முதலியன.

VI உயிர்களின் பிறப்பு எத்தனை வகைப்படும் ?

மனிதர், தேவர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன. தாவரம் என் ஏழு வகைப்படும்.

VII இப்பிறப்புக்களுள் சிறந்த பிறப்பு எது ?

மனிதப்பிறப்பு.

VIII மனிதப்பிறப்பு எதனால் சிறந்தது ?

மனிதன் ஆறறிவுடையவன் ; அவனுக்குப் பகுத்தறிவுண்டு; அவன் புண்ணிய பாவங்கள் இவையிவை என அறிபவன் ; புண்ணியங்களைச் செய்து மேலுலகடைந்து கடைசியில் இறைவன் திருவடியை அடைதற்குரியவன். ஆதலால் மனிதப் பிறப்பு சிறந்தது.

IX உயிரும் உடம்பும் எவை போன்று இருக்கின்றன?

முட்டைத் தோடும் குஞ்சும் போலவும், சட்டையும் பாம்பும் போலவும், பறவையும் கூடும் போலவும் இருக்கின்றன.

X மரணம் என்பது யாது ?

உடம்பிலிருந்து உயிர் பிரிந்து போவது மரணம் ஆகும்.

---

## பாடம் 4. மரணத்தின் பின் மனிதர் நிலை

I உடம்பை விட்டு உயிர் பிரிந்து போவது எவை போல்?

கூட்டை விட்டு பறவை பறந்து போவது போலவும்; முட்டைத் தோட்டைப் பிரிந்து குஞ்சு வெளிப்படுவது போலவும்; சட்டையைக் கழற்றிவிட்டு பாம்பு வெளிப்படுவது போலவும் உடம்பை விட்டு உயிர் பிரிகிறது.

II பிரிந்த உயிர்கள் என்ன செய்கின்றன?

புண்ணியஞ் செய்த உயிர்கள் மேலே அருள் உலகங்களுக்கும்-பாவம் செய்த உயிர்கள்கீழே இருள் உலகங்களுக்கும் செல்லுகின்றன.

III புண்ணியச்செயல்கள் எவை?

(1) நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்தல், (2) நித்திய கருமங்களை முறைப்படி செய்தல், (3) சமயச் சின்னங்கள் அனிதல், (4) ஆலய வழிபாடு செய்தல் (5) இறைபணியாற்றல், (6) திருவிழாக்களில் வழிபடுதல், (7) பக்தி செய்தல், (8) தியானித்தல், (9) அடியவரையும் தாய் தந்தையரையும் வழிபடுதல், (10) விரதங்களை மேற்கொள்ளுதல் முதலியனவாம்.

IV பாபச் செயல்கள் எவை?

தீய ஒழுக்கம், கொலை, களவு, புகை பிடித்தல், பொய் பேசுதல், நன்றி இல்லாமை, தீயவர் நட்பு, கடவுள் நிந்தை முதலியனவாம்.

V புண்ணியம் செய்த உயிர்கள் மேலுலகத்திற்குத் சென்று என்ன செய்கின்றன?

மேலுலகத்திற்குச் சென்று தாம் செய்த புண்ணியங்களுக்குத் தக்கவாறு இன்பத்தை அனுபவித்து, பின் சிறந்த இடங்களில் வந்து பிறக்கின்றன.

VI பாவம் செய்த உயிர்கள் கீழுலகத்திற்குச் சென்று என்ன செய்கின்றன?

கீழுலகத்திற்குச் சென்று தாம் செய்த பாபங்களுக்குத் தக்கவாறு துன்பத்தை அனுபவித்துப் பின் இழிந்த பிறப்புக்களை எடுக்கின்றன.

VII இன்ப துன்பங்களையும், பிறப்பினையும் கொடுப்பது யார்? கடவுள்.

VIII மரணமடைந்தவுடன் நமது உடம்பைச் சுட்டு சாம்பலாக்கி விட்டால் இன்ப துன்பங்களை எந்த உடம்பு அனுபவிக்கும்?

நமது உடம்பினுள் ஓர் உள்ளுடம்பு உண்டு. அவ்வுள்ளுடம்பு மரணத்திற்குப் பின் இன்ப துன்பங்களை அனுபவிக்கும்.

IX அந்த உள்ளுடம்பின் உறுப்புகள் எவை?

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தும்; மனம், புத்தி, அகங்காரம். என்ற மூன்றும் ஆக எட்டும் உள்ளுடம்பில் அமைந்திருக்கின்றன.

X மோக்ஷம் என்பது யாது?

பிறவிப் பெருங்கடலை நீந்தி கடவுளருளால் அவன் தாளடைதலே மோக்ஷமாம்.

---

## பாடம் 5. நமது சமய நூற்கள்

I நமது சமய நூற்கள் எவை?

வேதம், ஆகமம், சாத்திரம், தோத்திரம், புராணம் முதலியனவாம்.

II வேதம் எத்தனை வகைப்படும்?

இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என நான்கு வகைப்படும்.

III ஆகமங்கள் எத்தனை?

காமிகம் முதல் வாதுளம் வரை இருபத்தெட்டு ஆகும்.

IV சாத்திரங்கள் எவை?

திருவுந்தியார் முதல் சங்கற்ப நிராகரணம் வரை பதினான்காம்.

V தோத்திரங்கள் எவை?

தேவாரம், திருவாசகம், திவ்வியப் பிரபந்தம் முதலியனவாம்.

VI சைவ சமயக் குரவர்கள் யாவர்? அவர்கள் பாடிய நூல்கள் எவை?

சைவ சமயக் குரவர்கள் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் (அப்பர்), சுந்தரர், மாணிக்கவாசகர் எனும் நால்வர். முதல் மூவர் தேவாரத்தையும், மாணிக்கவாசகர் திருவாசகத்தையும் அருளிச்செய்தனர்,

VII சைவ சந்தானக் குரவர்கள் யாவர்?

மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாச்சாரியர், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாச்சாரியர் எனும் நால்வராவர்.

VIII வைணவாகமங்கள் எவை?

பாஞ்சராத்திரம், வைகானசம் எனும் இரண்டுமாம்.

IX வைணவ சமயத் தோத்திரங்கள் எவை?

ஆழ்வார்கள் பாடிய நாலாயிர திவ்வியப் பிரபந்தங்கள் முதலியனவாகும்.

X வைணவ ஆழ்வார்கள் யாவர்?

பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை ஆழ்வார், மதுரகவி ஆழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கை ஆழ்வார் என பன்னிருவராம்.

---

## பாடம் 6. ஆலயம்

I ஆலயம் என்றால் என்ன?

ஆன்மாக்களாகிய நாம் எங்கும் நிறைந்த கடவுளை ஒரே மனத்துடன் வழிபடுவதற்குரிய இடம் என்பது பொருள். இதனைக் கோயில் என்றும் கூறுவர்.

II கோயிலின் உறுப்புகள் எவை?

கோபுரம், கொடிமரம், பிரகாரம், மண்டபம், மூல விக்கிரகம், பரிவார விக்கிரகங்கள் முதலியனவாம்.

III கோபுரம் எதை உணர்த்துகிறது ?

நமது உடம்பைப் போன்று கோயில் அமைக்கப் பட்டிருப்பதால் கோயிலின் உறுப்புகள் நமது உடலுறுப்புக்கள் போல இருக்கின்றன. கோபுரம் இறைவனது ஸ்தூல வடிவத்தை உணர்த்துகிறது.

IV கொடிமரம் எதை உணர்த்துகிறது ?

இறைவனது சூக்கும வடிவத்தை உணர்த்துகிறது.

V பிராகாரம் எதை உணர்த்துகிறது ?

நமது உடம்பிலுள்ள பஞ்ச கோசங்களை உணர்த்துகிறது.

VI பஞ்ச கோசங்கள் எவை ?

அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் எனும் ஐந்துமாம்

VII மண்டபம் எதை உணர்த்துகிறது ?

இருதயத்தை உணர்த்துகிறது.

VIII மூலவிக்கிரகம் எதை உணர்த்துகிறது ?

இருதய மத்தியத்தில் உயிருக்குயிராய் வீற்றிருக்கும் இறைவனது காரணவடிவத்தை உணர்த்துகிறது.

IX பரிவார விக்கிரகங்கள் எவை ?

விநாயகர், நந்தி, பலிபீடம், திருமால், அம்பிகை, முருகன், சண்டேசுரர், சூரியசந்திரர், நவக்கிரகங்கள், வைரவர்.

X ஆலயங்களில் நடைபெறும் செயல்கள் எவை ?

நித்திய பூஜை, விசேட பூசை, திருவிழா முதலியனவாம்.

---

## பாடம் 7. ஆலய வழிபாடு

I ஆலயங்களுக்கு நாம் எப்படிச் செல்ல வேண்டும் ?

காலைக்கடன் முடித்து, பல் துலக்கி, நீராடி, சுத்த ஆடை கட்டி, விபூதி முதலிய சமயச் சின்னங்கள் அணிந்து, வேறு கவலையின்றி இறைவன் தோத்திரப் பாடல்களைப் பாடிக்கொண்டு போக வேண்டும்.

II கோயிலில் செய்யத் தகாத காரியங்கள் எவை ?

சத்தமிடுதல், விளையாடுதல், மலஜலங் கழித்தல், மூக்குச் சிந்துதல், துப்புதல், செருப்பு, சட்டை, தொப்பி மாட்டிக்கொள்ளுதல், சுருட்டுக் குடித்தல், வம்பு பேசுதல் சிரித்தல், சண்டையிடல், விக்கிரகங்களை மிதித்தல், எச்சிலாக்குதல் முதலியனவாம்.

III கோபுரத்தைக் கண்டவுடன் யாது செய்தல் வேண்டும் ?

கோபுரத்தை இறைவனது ஸ்தூல வடிவாகவும் திருவடியாகவும் கருதி வணங்கி உள்ளே செல்லுதல் வேண்டும்.

IV கொடிமரத்தை எவ்வாறு வழிபட வேண்டும்?

இறைவனது சூக்ஷ்ம வடிவாகக் கருதி அதன் அடியில் விழுந்து வணங்க வேண்டும்.

V பிராகாரம் எவ்வாறு வரவேண்டும் ?

கொடிமரத்திலிருந்து வலப்பக்கமாக மூன்று முறையும், உள் இரு பிராகாரங்களிலும் இரு முறையுமாக ஐந்து முறை சுற்றி வர வேண்டும்.

VI விநாயகரை எவ்வாறு வணங்க வேண்டும் ?

தலையில் மூன்று முறை குட்டிக்கொண்டு, மூன்று தோப்புக் கரணமிட்டு, விக்கினங்களை அகற்றுமாறு வேண்டிக் கொளல் வேண்டும்.

VII மூல விக்கிரகத்தை எவ்வாறு வணங்க வேண்டும்?

மூல விக்கிரகத்திற்கு தேங்காய், பழம் முதலிய நிவேதனங்கள் செய்து, அர்ச்சனை நடத்தி தோத்திரங்கள் பாடி, வணங்கி பிரசாதம் பெற்று வெளிவர வேண்டும்

VIII பரிவார தேவதைகளை எப்படி வணங்கவேண்டும்?

ஒவ்வொன்றையும் அவற்றிற்குரிய தோத்திரப் பாடல்களைப் பாடி வணங்க வேண்டும்.

IX சண்டேசுரரை எப்படி வணங்க வேண்டும் ?

மூன்று முறை கையால் தட்டி வணங்கி ஆலய வழிபாட்டின் பயனை அருளிச் செய்யுமாறு வேண்டிக் கொள்ள வேண்டும்.

X வழிபாடு முடித்தபிறகு யாது செய்தல் வேண்டும் ?

கொடிமரத்தின் பக்கத்தில் வந்து வடக்கு நோக்கி இருந்து கோயிலில் புறக்கண்ணால் கண்ட கடவுளை அகக்கண்ணால் கண்டு தியானிக்க வேண்டும்.

---

## பாடம் 8. சமயச் சின்னங்கள்

I சமயச் சின்னங்கள் எவை ?

சைவர்களுக்கு விபூதி, உருத்திராக்கம் செந்தூரம் முதலியனவும், வைணவர்களுக்கு திருநாமம், துளசி மணி முதலியனவும் சமயச் சின்னங்களாம்.

II விபூதி எவ்வாறு தயாரிக்க வேண்டும் ?

பசுவின் சாணத்தை நன்ருய் நீற்றி வடிகட்டியெடுத்து மணமுள்ள பூக்களை அதில் சேர்த்து வைத்திருந்து கொஞ்சம் கொஞ்சமாக எடுத்து பையிலேனும் சம்புடத்திலேனும் வைத்துக் கொண்டு தரிக்க வேண்டும்.

III விபூதியை எவ்வாறு தரிக்க வேண்டும் ?

முதலில் சிறிது விபூதியை எடுத்து இடது கையில் வைத்துக் கொண்டு, வலது கை விரல்களால் உச்சி, நெற்றி, மார்பு, கைகள், இவற்றில் ''சிவ சிவ'' எனச் சொல்லிக் கொண்டே தரிக்க வேண்டும்.

IV விபூதியின் மகிமைகள் எவை ?

பசுவின் சாணத்திற்கு கிருமிகளை அகற்றவும் துர்நாற்றத்தைப் போக்கவும் சக்தியுண்டு. சாணத்தால் தயாரிக்கப்பட்ட விபூதிக்கும் அந்த சக்தியுண்டு. விபூதி உடம்பிலுள்ள நீர்க்குற்றத்தை அகற்றுகிறது. உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் முடிவில் சாம்பலாகும் எனும் தத்துவத்தை உணர்த்துகிறது. நமது பாசங்களை நீருக்கினுல் தான் கடவுள் அருளைப் பெறலாம் என்பது இதன் கருத்து. இதற்கு இன்னும் அனேக பெருமைகள் உண்டு.

V சந்தனப்பொட்டு ஏன் தரிக்கவேண்டும்?

நமது புறுவங்களின் மத்தியில் அநேக நரம்புகள் சேர்ந்திருக்கின்றன. அவைகள் நமது இந்திரியத் தொழில்களால் அடிக்கடி சூடு பிடிக்கின்றன. அவற்றைத் தணிப்பிக்க சந்தனம் முதலிய பொருள்களை அணிகிறோம். பொட்டு சிவபெருமானது மூன்றாவது கண்ணை ஞாபகப்படுத்துகிறது.

VI செந்தூரத்தின் மகிமை என்ன?

செந்தூரம் மஞ்சளால் உண்டாக்கப் படுகிறது. மஞ்சளுக்கு பல குற்றங்களை அகற்றும் சக்தியுண்டு. எனவே அது சக்தியின் அருளாக தரிக்கப்படுகிறது.

VII உருத்திராக்கத்தின் சிறப்பு யாது?

உருத்திராக்கம் ஒரு சிறந்த மருந்து. கப நோய் முதலியவற்றிற்கு உருத்திராக்கத்தை உறைத்து பிற மருந்துகளுடன் கொடுப்பதுண்டு. அன்றியும் அது சிவபெருமானுடைய கண்ணையும் கழுத்தில் தங்கியிருக்கும் காளகூட விஷத்தையும் நினைவூட்டுகிறது.

VIII துளசிமணியின் பெருமை என்ன?

துளசிமணியும் உருத்திராக்கத்தைப் போல ஓர் சிறந்த மருந்தாகும். அதை அனிபவரை விலங்கு, பேய், பிசாசு முதலியன அணுகாது. நாம ஜெபம் செய்வதற்கு இது ஓர் சிறந்த கருவி.

IX நாமம் அணிவதன் கருத்தென்ன?

இறைவனது திருவடியை அடைதலே மனிதர்களது முக்கிய கடமையாகும் என்பதை இது உணர்த்துகிறது. நாமம் திருவடி போன்று அமைக்கப்பட்டிருக்கிறது.

X சமயச் சின்னங்களை பலர் பலவாறு அனிவதன் கருத்தென்ன?

விபூதியை குருவிடம் தீக்ஷை பெறாதவர்கள் தண்ணீரில் குழைக்காமல் பூசுவார்கள். தீக்ஷை பெற்றவர்கள் தக்க மந்திரங்களைச் சொல்லி தண்ணீரில்

குழைத்து அணிவார்கள். நாமத்தை தென்கலை வைணவர் சிறிது தாழ்த்தியும், வடகலை வைணவர் சிறிது உயர்த்தியும் அணிவார்கள்.

இவ்வாறே நமது சமயச் சின்னங்கள் ஒவ்வொன்றும் மருந்தாகவும், தத்துவங்களைக் கொண்டதாகவும் விளங்குகின்றன.

---

## பாடம் 9. நித்திய கர்மம்

I காலையில் எப்போது தூக்கத்திலிருந்து எழுந்திருக்க வேண்டும்?

சூரிய உதயத்திற்கு முன் எழுந்திருக்க வேண்டும். விடிய ஐந்து நாழிகைக்கு முன் துயிலெழுதல் நலம்.

II துயிலெழுந்தவுடன் என்ன செய்ய வேண்டும்?

கை, கால், முகம் கழுவி, திருநீறணிந்து கடவுளையும் தாய் தந்தையர்களையும் வணங்க வேண்டும்.

III அதன்பின் யாது செய்தல் வேண்டும்?

காலைக் கடன் முடித்து, பல் துலக்கி, நீராடி, தூய ஆடை கட்டிக்கொண்டு பக்கத்திலுள்ள கோயிலுக்குச் சென்று ஆலய வழிபாட்டு முறையில் கடவுளை வணங்கவேண்டும்.

IV உணவு உண்பதில் கவனிக்க வேண்டிய விஷயங்கள் எவை?

உணவு தயாரிப்பவர் மது, மாமிச உணவு உண்ணுதவராய் இருக்க வேண்டும். உணவு உண்ணுமிடம் சுத்தமாய் இருக்க வேண்டும். உணவுண்ணும் பாத்திரங்கள் வாழையிலை, பலாவிலை, புன்னையிலை, பாதிரியிலை, தாமரையிலை இவைகளில் எதுவேனும் ஒன்ருய் இருக்க வேண்டும். நன்ருய் உட்கார்ந்து இருந்து அவசரப்படாமல் நன்ருய் மென்று உண்ணல் வேண்டும்.

V சாயுங்கால கருமங்கள் எவை ?

சூரியன் அடைவதற்கு முன் எதுவேனும் ஓர் நீர் நிலையத்திற்குச் சென்று கை, கால், முகங்களைக் கழுவி, விபூதி முதலிய சமயச் சின்னங்களை அணிந்து ஆலயத் திற்குச் சென்று வழிபாடு செய்யவேண்டும்.

VI மாலையில் வீடுகளில் செய்யவேண்டிய சமயக் கிரியைகள் எவை ?

வீட்டில் எத்தனை மின்சார விளக்குகள் இருந்தா லும் குத்து விளக்கு ஒன்றை நன்ருய்ப் பூசி எண்ணெய் திரியிட்டு விளக்கேற்றி, பூமாலை சார்த்தி, பொறி- பழம் முதலியன வைத்து நிவேதித்து, சிறிது நேரம் வீட்டில் உள்ள எல்லோரும் ஒன்று சேர்ந்து இருந்து தோத்திரங்கள் பாடவேண்டும். அதன்பின் சிறிது நேரம் தெய்வீக சரித்திரங்களைப் படிப்பது நல்லது.

VII இராப்போஜனம் எப்போது செய்தல் வேண்டும்?

இருட்டி எட்டு நாழிகைக்குள் செய்ய வேண்டும். அதற்கு மேற்பட்டால் அஜீரணம் முதலிய நோய்கள் உண்டாகும். தூக்கம் நன்ருய் வராது. இராப் போ ஜனம் நன்ருய் தகிக்கத் தக்கதாய் இருக்கவேண்டும்.

VIII போஜனம் கழிந்த பிறகு யாது செய்தல் வேண்டும்?

போஜனம் செய்தவுடன் தூங்கக்கூடாது சிறிது உணவு தகனமான பிறகு தூங்குதல் நல்லது.

IX தூக்கத்தில் கவனிக்கவேண்டிய விஷயங்கள் எவை ?

வெறும் தரையில் பாய் முதலியன விரிக்காமல் தூங்கக்கூடாது. தூக்கத்திற்கு முன் பயத்தை உண்டுபண்ணத்தக்க விஷயங்களைப் பேசக்கூடாது. வட திசையில் தலைவைத்து தூங்கக்கூடாது. தூக்கத் துக்குத் தடையை உண்டுபண்ணும் நாடகங்கள், சினிமாக்கள் முதலியவற்றை வெகுநேரம் பார்க்கக் கூடாது. தூக்க அறையில் சக்தி கூடின மின்சார விளக்குகளை எரியவிடக்கூடாது.

X விடிய ஐந்து நாழிகையில் ஏன் துயிலெழ வேண்டும் ?

அக்காலம் தேவர்கட்குரிய சிறந்த காலம், கடவுள் தியானத்திக்குரிய காலம். நமது மனம் களங்கமற்று பரிசுத்தமாய் இருக்கும் நேரம். புதிதாக எதுவேனும் கற்றுக் கொள்ளுவதற்கு ஏற்ற காலம். பறவைகள் விழிக்கும் காலம். மலர்கள் மலரும் வேளை. ஆதலால் மனிதர்களாகிய நாமும் விடிய ஐந்து நாழிகையில் துயிலெழுந்து கடமைகளைச் செயதல் நமது வாழ்விற்கு மிகுந்த உபயோகமாக இருக்கும்.

---

## பாடம் 10. நல்லொழுக்கம்

நாம் கைக்கொள்ளவேண்டிய நல்லொழுக்கங்கள் எவை ?

1. எல்லா உயிர்களுக்கும் நன்மை செய்தல்.
2. பிறர் பொருளை திருடாதிருத்தல்.
3. லாகிரிப் பொருள்களை உபயோகப் படுத்தாமை.
4. உண்மை பேசுதல்
5. நன்றி அறிதல்.
6. பொறுமை.
7. இன்சொல் பேசல்.
8. பிறருக்கு இயன்ற உபகாரம் செய்தல்.
9. நல்லோரிடம் நட்புக் கொள்ளுதல்
10. தாய் தந்தையர்களைப் பேணல் முதலியன வாம்,

நாம் விலக்கவேண்டிய தீய ஒழுக்கங்கள் ?

1. உயிர்களைத் துன்புறுத்தல்.
2. பிறர் பொருளைத் திருடுதல்.
3. லாகிரிப் பொருள்களை உபயோகித்தல்
-. பொய் பேசுதல்.
5. நன்றி மறத்தல்.

6. கோபித்தல்.
7. வன்சொல் பேசுதல்.
8. சுயநலம் பேணல்
9. தீயோர் நட்புக்கொள்ளுதல்.
10. தாய் தந்தையர்களைப் பேணுமை.

ஆலயங்களில் செய்யத்தக்கன எவை ?

நீராடி தூய ஆடை கட்டுதல் சமயச் சின்னங்கள் அணிதல். பெருக்குதல். மெழுகுதல். தீபம் இடல். தூபம் இடல் பூ எடுத்து மாலை கட்டுதல். நந்தவனம் அமைத்தல் தோத்திரம் பாடல். பூஜைக்கு வேண்டியன கொடுத்தல். அமைதியாய் இருத்தல். சண்டை, கூச்சல் போடாமை முதலியனவாம்.

ஆலயங்களில் செய்யத்தகாதவை எவை ?

1. நீராடாமலும் தூய ஆடைகள் கட்டாமலும் போகுதல்.
2. சமயச் சின்னங்கள் அணியாமை.
3. எச்சில் துப்புதல்.
4 மலஜலம் கழித்தல்.
5. கோயில் மதில் சுவர்களை ஒட்டி எரு இடுதல், மதில் சுவர்களில் வரட்டி தட்டுதல்.
6. நந்தவனம், பசு மடம் இவற்றைப் பாழ்படுத்தல்
7 கோயில் தீர்த்தங்களை அசுத்தப்படுத்துதல்.
8. கோபம், மோகம் முதலியன கொள்ளுதல்
9. வழிபடுவோரை துன்புறுத்தாமை.
10. தாம்பூலம் உமிழ்தல் லாகிரிப் பொருள்களை உபயோகித்தல் முதலியன.

---

## தோத்திரப்பாமாலை

I விநாயகர் தோத்திரம் கூறுக.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே. 1

திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவமாய் நமது உள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்து பிள்ளையைப் பேணுவாம். 2

II சிவபெருமான் தோத்திரம் எத்தனை வகைப்படும்?

தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, புராணம் என ஐந்து வகைப்படும்.

அவை ஒவ்வொன்றிலும் சில பாடல்கள் கூறுக.

**சம்பந்தர் தேவாரம்**

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே
நீலமாமிடற் றால வாயிலான்
பால தாயினுர், ஞால மாள்வரே.
அடிக ளாலவாய் படிகொள் சம்பந்தன்
முடிவி லின்றமிழ், செடிக ணீக்குமே

**அப்பர் தேவாரம்**

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

**சுந்தரர் தேவாரம்**

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான் மறவாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூ ரருட்டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே.

**திருவாசகம்**

வெறுப்பன வேசெய்யு மென்சிறு மையை நின் பெருமையினுல்
பொறுப்பவனே யராப் பூண்பவ னேபொங்கு கங்கை சடைச்

செறுப்பவனேநின் றிருவருளாலென் பிறவியை வேர்
அறுப்பவனேயுடையாய்அடியேனுன் அடைக் கலமே,

பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயான் மறைபோலுங் காணேடீ!
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண் டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானுன் சாழலோ.

திருவிசைப்பா

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமாக் கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்ற எம் சிவனைத்
திருவீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டு கண்டுள்ளம்
குளிர என்கண் குளிர்ந்தனவே.

திருப்பல்லாண்டு

பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன் மன்னிய தில்லை தன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம் பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயில வல்லானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

புராணம்

ஆதியாய் நடுவுமாகி அளவிலா அளவுமாகி
சோதியாய் உணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகிப்
பேதியா ஏகமாகிப் பெண்ணுமாய் ஆணுமாகிப்
போதியா நிற்குந்தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி.

III உமாதேவியாருக்குரிய ஒரு தோத்திரம் கூறுக.

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கை மடமானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாள்தொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே.

IV நடராஜர் தோத்திரம் ஒன்றுகூறுக.

பத்தனாய்ப் பாடமாட்டேன்
பரமனே பரமயோகி
எத்தினாற் பத்திசெய்கே
னென்னைநீ யிகழவேண்டாம்
முத்தனே முதல்வா தில்லை
யம்பலத் தாடுகின்ற
அத்தாவுன் ஆடல்காண்பான்
அடியனேன் வந்தவாறே.

V தெட்சணாமூர்த்தி தோத்திரம் ஒன்றுகூறுக

கல்லாலின்புடை யமர்ந்து நான்மறையா
றங்க முதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய்
மறைக் கப்பாலாய்
எல்லமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி
யிருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவரை நினையாமல் நினைந்து
பவத் தொடக்கை வெல்வாம்.

VI சுப்பிரமணியர் தோத்திரம் சில கூறுக

1. நங் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே.

2. திருப்புகழ்

பத்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனு மாறெனைப் பெருவாழ்வின்
முத்தியே சேர்வதற் கருள்வாயே
உத்தமா தானசற் குணர்நேயா
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா
வித்தகா ஞானசத் திநிபாதா
வெற்றிவே லாயுதப் பெருமாளே.

3. கந்தர் அநுபூதி

ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா யருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவில்
சாடுந் தனியா னைசகோ தரனே.
உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

4 கந்தர் அலங்காரம்

மாலோன் மருகனை மன்றாடி
மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான
தெய்வத்தை மேதினியில்
சேலார் வயற்பொழில்
செங்கோடனைச் சென்று கண்டுதொழ
நாலாயிரங்கண் படைத்திலனே
அந்த நான் முகனே.

VII திருமால் தோத்திரம் ஒன்று கூறுக.

பச்சைமா மலைபோல்மேனி
பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா ! அமரரேறே !
ஆயர்தம் கொழுந்தே யென்னும்

இச்சுவை தவிரயான்போய்
இந்திர லோகமாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகருளானே. 1

தருதுயரம் தடாயேல்
உன்சரணல்லால் சரணில்லை
விரைகுழுவும் மலர்ப்பொழில்சூழ்
வித்துவக்கோட் டம்மானே
அரிசினத்தால் ஈன்றதாய்
அகற்றிடினும் மற்றவள் தன்
அருள்நினைந் தேயழும் குழவி
யதுவேபோன் றிருந்தேனே.

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துஉன் பவளவாய்காண்பேனே. 3

VIII சண்டேசுரர்

அண்டர் பிரானும் தொண்டர் தமக்
கதிபனுக்கி யனைத்தும் நாம்
உண்ட கலமும் உடுப்பனவும்
சூடுவனவும் உனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோம்
என்றங்கவர் பொற்றட முடிக்குத்
துண்ட மதிசேர் சடைக் கொன்றை
மாலை வாங்கிச் சூட்டினார்.

## வாழ்த்து

வையம் நீடுக மாமழை மன்னுக
மெய் விரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான் தழைத் தோங்குக
தெய்வ வெண் திருநீறு சிறக்கவே.

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீ ரடியாரெல்லாம்.

வான் முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை யரசுசெய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்.

இந்துமத விளக்கம் முற்றுப் பெற்றது.

---

## ஜபம்

எங்கும் நிறைந்து விளங்கும் இறைவனே ! உமது திருவடிகளுக்கு எங்களது வணக்கம் உரியதாகுக. எங்களிடம் அன்பு, அறிவு, அருள், அடக்கம் முதலிய அருங்குணங்கள் நாள் தோறும் வளர்ந்தோங்கும்படி அருள் செய்யவேண்டும். படிப்பில் ஆர்வமும் பக்தியும் நாள் தோறும் சிறந்தோங்க கிருபை செய்யவேண்டும். உமது திருவடியை மறவாத சிந்தையும், சீரும் தந்து எங்களைக் காப்பாற்றும்படி உம்மை வேண்டுகிறோம் கிருபை செய்வீராக.

---

## கூட்டு வணக்கம்

விநாயகர்

தடக்கை ஐந்துடைத் தலைவா போற்றி
இடுக்கண் தீர்த்தருள் இறைவா போற்றி.

சிவபெருமான்

தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி.

சக்தி

ஏகம்பத்துறை இறைவா போற்றி
பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி.

முருகன்

ஆறுமுகத்தெம் அண்ணலே போற்றி
ஈறில் தமிழ்உரை இறைவா போற்றி.

திருமால்

அன்றிவ் வுலகம் அளந்தாய் போற்றி
சென்றங்குத் தென்னிலங்கைச்
செற்றாய் திறல் போற்றி.



# பித்ரு தர்ப்பண விதி

1. ஆசம்ய | சுக்லாம்பரதரம் + சாந்தயே | ஓம் பூ: ர்ப்புவஸ்ஸுவரோம் || 1 ||

ஸங்கல்பம் : | மமோபாத்த + ப்ரீத்யர்த்தம் அபவித்ர: பவித்ரோ வா ஸர்வாவஸ்த்தாம் கதோபி வா | ய: ஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸ பாஹ்யாப்யந்தர : சுசி : || மானஸம் வாசிகம் பாபம் கர்மணா ஸமுபார்ஜிதம் | ஸ்ரீராம ஸ்மரணேனைவ வ்யபோஹதி ந ஸம்சய : || ஸ்ரீராம ராம ராம ||

திதிர் விஷ்ணுஸ் - ததா வாரோ நக்ஷத்ரம் விஷ்ணுரேவ ச | யோகச்ச கரணஞ்சைவ ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத் || ஸ்ரீகோவிந்த கோவிந்த கோவிந்த || அத்ய ஸ்ரீபகவத : மஹா புருஷஸ்ய விஷ்ணோராஜ்ஞயா ப்ரவர்த்தமானஸ்ய ஆத்ய–ப்ரஹ்மண : த்விதீய பரார்த்தே, ச்வேதவராஹ கல்பே வைவஸ்வதமன்வந்தரே.

...னம் செய்வர். இவை அவரவர் குலாசாரத்தைப் பொருத்தவை.

தந்தை இறந்த ஆண்டில் தர்ப்பணம் செய்ய வேண்டாம். ஆனால் அந்த ஆண்டு பூர்த்தியாவதற்குள் கிரஹணம் வந்தால் கிரஹணபுண்யகாலத்தில் தர்ப்பணம் செய்து விட்டுப் பின்பு அமாவாஸைகளிலும் செய்யவேண்டும்.

நடுப்பகலுக்குமேல் தர்ப்பணத்திற்காக ஒரு ஸ்நானம் செய்துவிட்டு மாத்தியான்ஹிகத்திற்குப்பின் தர்ப்பணம் செய்யவேண்டும். அதுவரை பட்டினியாயிருக்க வேண்டும். ஈரவஸ்திரத்தைக்கொண்டு தர்ப்பணம் செய்யக்கூடாது.

1. ப்ரயோகம் ;—ஆசமனம் செய்யும் போது கையில் பவித்திரமிருக்கக் கூடாது. ஆசமனம் முடிந்தபின் பவித்திரத்தை மோதிர விரலில் அணிந்து கொண்டு அத்துடன் மூன்று தனி, தர்ப்பைகளையும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு 'சுக்லாம்பரதரம்' 'பிராணாயாமம்', 'ஸங்கல்பம்' முதலியவற்றைச் செய்யவேண்டும். ஸங்கல்பம் முடிந்ததும் தர்ப்பைகளைத் தெற்குதிக்கில் போட்டுவிட வேண்டும்.

திதி - வார - நக்ஷத்திரங்கள்—திதிகள் பதினைந்து ;— பிரதமை, த்விதீயை த்ருதீயை, சதுர்த்தீ, பஞ்சமீ, ஷஷ்டீ, ஸப்தமீ, அஷ்டமீ, நவமீ, தசமீ, ஏகாதசீ, த்வாதசீ, த்ரயோதசீ, சதுர்த்தசீ, அமாவாஸ்யா அல்லது பௌர்ணமீ.

வாரம் அல்லது நாள் :—பானு வாஸரம் (ஞாயிறு), இந்து (திங்கள்), பௌம (செவ்வாய்), ஸௌம்ய (புதன்), குரு (வியாழன்), ப்ருகு (வெள்ளி), ஸ்திர (சனி).

நக்ஷத்ரங்கள்:—அச்வினீ, பரணீ, க்ருத்திகா, ரோஹிணீ, ம்ருகசிரா, ஆர்த்ரா, புனர்வஸூ, புஷ்ய, ஆச்லேஷா, மகா, பூர்வபல்குனீ, உத்திரபல்குனீ ஹஸ்தா, சித்ரா, ஸ்வாதீ, விசாகா, அனுராதா, ஜயேஷ்டா, மூலா, பூர்வாஷாடா, உத்ராஷாடா, ச்ரவணா, ச்ரவிஷ்டா, சதபிஷக், பூர்வப்ரோஷ்டபதா, உத்தரப்ரோஷ்டபதா, ரேவதீ.

## பித்ரு தர்ப்பணவிதி

### 1. ஆசமனம்

2. அஷ்டாவிம்சதி தமே கலியுகே, ப்ரதமே பாதே ஜம்பூத்வீபே, பாரதவர்ஷே, பரதகண்டே மேரோர் தக்ஷிணே பார்ச்வே சகாப்தே அஸ்மின் வர்த்தமானே வ்யாவஹாரிகே.

ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணும் மத்யே (அமுக) நாம ஸம்வத்ஸரே—அயனே-ருதௌ-மாஸே க்ருஷ்ண பக்ஷே அமாவாஸ்யாயாம் புண்யதிதௌ ||

(ப்ராசீனுவீதி) (பூணூல் இடமாக) வஸு ருத்ராதித்ய-ஸ்வரூபாணும் அஸ்மத் – பித்ரு–பிதாமஹ - ப்ரபிதா மஹானும் மாத்ரு–பிதாமஹீ–ப்ரபிதாமஹீனும் ஸபத்னீக-மாதாமஹ–மாது : பிதாமஹ மாது ; – ப்ரபிதாமஹானும் உபய - வம்ச - பித்ரூணும் அக்ஷய்ய த்ருப்த்யர்த்தம் அமாவாஸ்யா – புண்யகாலே திலதர்ப்பணம் கரிஷ்யே | உபவீதி | அப உபஸப்ருச்ய | பிராசீனுவீதி | ||2||

## பித்ரு தர்ப்பணவிதி ஆசமனம்

2. ஸங்கல்பம்—அசுத்தமாக வாயினும் சுத்தமாக வாயினும் எந்த நிலையிலிருந்தாலும் எவனொருவன் தாமரைக் கண்ணனை நினைக்கின்ருனே அவன் உள்ளும் புறம்பும் சுத்தமானவனே. மனதாலோ வாக் காலோ செயலாலோ வந்தடைந்த பாவம் ஸ்ரீராம ஸ்மரணையா லேயே கழிந்துபோம். இதில் சந்தேக மில்லை. ஸ்ரீராம ராம ராம. திதியும் விஷ்ணு, வாரமும் விஷ்ணு, நக்ஷத் திரமும் யோகமும் கரணமும் விஷ்ணுவே ; உலகனைத்தும் விஷ்ணுவே. ஸ்ரீ கோவிந்த, கோவிந்த, கோவிந்த.

இப்போது புருஷோத்தமனுன பகவான் விஷ்ணு வின் கட்டளையால் தொழில் புரியும் பிரம்மாவின் இரண்டாவது பரார்த்தத்தில் சுவேதவராஹ கல்பத் தில் வைவஸ்வத மன்வந்தரத்தில் இருபத்தெட்டா வது சதுர் யுகத்தில், கலியுகத்தில், முதல் பாதத்தில், ஜம்பூத்வீபத்தில் பாரதவர்ஷத்தில் பரதகண்டத்தில்,

மேருவின் தெற்குப் பக்கத்தில் இப்போது நடை முறையிலிருக்கும் சகாப்தத்தில் பிரபவாதி அறுபது ஆண்டுகளிடை இன்ன ஸம்வத்ஸரத்தில், இன்ன அயனத்தில், இன்னருதுவில், இன்னமாஸத்தில், கிருஷ்ண பக்ஷத்தில், அமாவாசை புண்ணியதிதியில் (பூணூலை இடமாக மாற்றிக் கொள்க)—

மாதங்கள்—சித்திரை (மேஷம்), வைகாசி (ருஷபம்), ஆனி (மிதுனம்), ஆடி (கடகம்), ஆவணி (ஸிஹ்மம்), புரட்டாசி (கன்னி), ஐப்பசி (துலாம்). கார்த்திகை (வ்ருச்சிகம்), மார்கழி (தனுஸ்), தை (மகரம்), மாசி (கும்பம்) பங்குனி (மீனம்).

ருதுக்கள்—சித்திரை - வைகாசி (வஸந்தருது) ஆனி - ஆடி (க்ரீஷ்மருது) ஆவணி—புரட்டாசி (வர்ஷருது) ஐப்பசி- கார்த்திகை (சரத்ருது) மார்கழி—தை (ஹேமந்தருது), மாசி- பங்குனி (சிசிரருது).

அயனம்—தை முதல் ஆடி வரை உத்தராயணம். ஆடி முதல் தை வரை தக்ஷிணாயனம்.

(தக்ஷிணாக்ரம் கூர்ச்சம் நிதாய ||)

ஆவாஹனம் || ஆயாத பிதர: ஸோம்யா கம்பீரை: பதிபி: பூர்வ்யை:| ப்ரஜாமஸ்மப்யம் தததோ ரயிஞ்ச தீர்க்காயுத்வஞ்ச சத சாரதஞ்ச|| அஸ்மின் கூர்ச்சே மம வர்க்கத்வய-பித்ரூன் ஆவாஹயாமி || 3 ||

3. ஆவாஹனம் - சுத்தமான தரையிலோ (வெள்ளி, பித்தளை, அல்லது தாமிர) தாம்பாளத்திலோ கிழக்குமேற் காகப் பரப்பிய தர்ப்பைகளின் மேல் தெற்கு நுனியாக கூர்ச்சத்தை வைத்து 'ஆயாதபிதர:' என்ற மந்திரத்தால் எள்ளைப்போட்டு ஆவாஹனம்.

வசு ருத்ர ஆதித்ய ஸ்வரூபிகளாயிருக்கும் எங்களுடைய பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்களுக்கும், மாத்ருபிதாமஹி ப்ரபிதாமஹிகளுக்கும், பத்னிகளுடன் கூடிய மாதாமஹர், மாதாவின் பிதாமஹர், மாதாவின் பிரபிதாமஹர் ஆகியோருக்கும், இரண்டு வம்ச பித்ருக்களுக்கும் அழிவில்லாத திருப்தி ஏற்படும் பொருட்டு, அமாவாசை புண்ணிய காலத்தில் திலதர்ப்பணம் செய்கின்றேன். (பூணூலை வலமாக மாற்றிக்கொண்டு, ஜலத்தைத் தொட்டு, மறுபடி இடமாக மாற்றிக் கொள்க.)

3. (தெற்கு நுனியாகக் கூர்ச்சத்தை வைக்க.)

ஆவாஹனம்: பிதிருக்களே! மிகவும் நல்லவர்களான நீங்கள் எங்களுக்கு ஸந்ததியையும், செல்வத்தையும், நீண்ட ஆயுளையும் ஆசீர்வதித்தளித்துக் கொண்டு, கம்பீரமாகச் சிறந்த ஆகாசமார்க்கத்தில் இங்கு எழுந்தருளுங்கள். இந்தக் கூர்ச்சத்தில் இரண்டு வம்ச பிதிருக்களையும் ஆவாஹனம் செய்கின்றேன்.

ஆஸனம் || ஸக்ருதாச்சின்னம் பர்ஹி - ரூர்ணம்ருது | ஸ்யோனம் பித்ருப்யஸ்த்வாபராம்யஹம் | அஸ்மின் ஸீதந்து மே பிதர: ஸோம்யா:| பிதாமஹா: ப்ரபிதாமஹாச் - சானுகைஸ்ஸஹ || வர்க்கத்வய - பித்ருணா- மிதமாஸனம் | ஸகலாராதனை: ஸ்வர்ச்சிதம் || 4 ||

4. ஆஸனம் : தர்ப்பையே! நீ ஒருபோது என்னால் சேகரிக்கப்பட்டாய். உன்னைப் பிதிருக்களுக்காகப் பரப்புகிறேன். நீ அவர்களுக்குப் பஞ்சுபோல் மிக மெதுவான ஆஸனமாக இரு. அருள் சுரக்கும் எங்கள் பித்ருபிதாமஹப் பிரபிதாமஹர்கள் தங்களுடைய பரிவாரங்களுடன் இங்கு எழுந்தருளட்டும். (இரண்டு வம்ச பித்ருக்களுக்கும் இது ஆஸனம். அவர்களை எல்லாவித உபசாரங்களுடனும் பூஜிக்கின்றேன்).

4. ஆஸனம்—'ஸக்ருதாச்சின்னம்' என்ற மந்திரத்தால் தனி தர்ப்பைகளைக் கூர்ச்சத்திற்குக் கீழ் வைக்கவேண்டும்," ஸகலாராதனை : ஸ்வர்ச்சிதம் என்று மறுபடி எள்ளைப்போட வேண்டும்.

தர்ப்பை—ஆஸனத்திற்குக் குறைந்தது மூன்று, பவித்திரத்துடன் சேர்த்துப்பிடிக்க.மூன்று, கூர்ச்சம் செய்ய மூன்று (ஐந்து அல்லது ஏழு).

எள்—சிறுகச் சிறுக எள்ளைச் சேர்த்துத் தர்ப்பணம் செய்யவேண்டும். எள்ளை எடுக்கும்போது கட்டைவிரலுடன் ஆள் காட்டி விரலைச் சேர்க்கக் கூடாது (அது ராக்ஷஸ முத்ரை எனப்படும்.) கட்டைவிரலும் பவித்திரவிரலும் சேர்த்து எடுத்துக்கொள்ளவும் ; மற்ற விரல்களும் சேர்க்கலாம். ஞாயிறு, செவ்வாய், வெள்ளி, ஜன்மநக்ஷத்திரம் முதலியன கூடிவந்தால் எள்ளுடன் அக்ஷதை சேர்த்துக் கொள்ளவும்.

தர்ப்பணம் பித்ருவர்க்கம் :—உதீரதாமவர உத்பராஸ உன்மத்யமா ; பிதரஸ் ஸோம்யாஸ : । அஸுᳪம் ய ஈயு-ரவ்ருகா ருதஜ்ஞாஸ்தே நோ஽வந்து பிதரோஹவேஷுᳪ ॥ கோத்ரான் - சர்மண : வஸுᳪ ரூபான் பித்ரூன் ஸ்வதா நமஸ்—தர்ப்பயாமி ॥ 5 1 ॥

தர்ப்பணம்—பித்ரு தர்ப்பணத்தில் கட்டைவிரலுக்கும் மற்ற நான்கு விரல்களுக்கும் இடையில் வலது புறமாகச் சாய்த்து கைநிறையத் தீர்த்தம் விடவேண்டும். தர்ப்பணம் செய்யும் போது இடது காலை முட்டியிட்டு, வலது காலை மடித்துக் குந்திட்டுக்கொண்டு இரண்டு கைகளையும் முழங்தாள்களுக்குள் அடக்கி வைத்துக் கொண்டு கிழக்கு முகமாகவோ அல்லது தெற்கு முகமாகவோ இருக்கவேண்டும்.

தெற்கு முகமாகத் தர்ப்பணம் செய்பவரும் ஆசமனம், ஸங்கல்பம், ஆவாஹனம், ஆஸனம் முதலியவற்றைச் செய்யும் போது கிழக்கு முகமாகத்தான் செய்யவேண்டும்.

5.1. வேதத்தில் சொல்லிய யாகாதி கர்மங்களை அனுஷ்டித்துப் பிதிருத்தன்மையடைந்தவர் உத்தமர்; சுருதியிலுள்ள கர்மங்களை மட்டும் அனுஷ்டித்தவர் மத்திமர்; சுருதிஸம்ஸ்காரங்களும் ஒழுங்காக இல்லாதவர் அதமர்.

5.1. ஸோமயாகம் செய்த சிறந்த பிதிருக்களைப் போலவே, நடுத்தரத்தினரும், கடைப்பட்டவருங் கூட உயர்ந்த கதியை அடையட்டும் நம்மிடம் கோபமற்றவர்களாய் அவர்கள் நாம் செய்யும் நற்கர்மாவை உணர்ந்து, நமது பிராணனை ரக்ஷித்து, நாம் அழைக்கும்போது வந்து, நம்மைக் காத்தருள வேண்டும். இன்ன கோத்திரத்தினரும் இன்ன பெயருள்ளவரும் வசு ரூபியுமாகிய எங்கள் பிதாவை நமஸ்கரித்து அவருக்குத் தர்ப்பணம் செய்கின்றேன்.

அங்கிரஸோ ந: பிதரோ நவக்வா அதர்வாணோ ப்ருகவ: ஸோம்யாஸ: । தேஷாம் வயம் ஸுமதௌ யஜ்ஞியானுமபி பத்ரே ஸௌமனஸே ஸ்யாம । கோத்ரான்-சர்மண: வஸு ரூபான் பித்ரூன் ஸ்வதா நமஸ்-தர்ப்பயாமி ॥ 5 2 ॥

5.2. அங்கிரஸர், அதர்வணர், பிருகுக்கள் என்று பெயருள்ள நமது பித்ருக்கள் புதிது புதிதான வகையில் அருள் புரிபவர்கள். ஸோமயாகம் செய்தவர்கள் பூஜித்தற்குறிய அவர்களுடைய புத்தி எந்தச் சிறந்த வழியில் சென்றதோ அதையே நாமும் பின் பற்றி, மங்களகரமான நல்ல மனது படைத்தவர்களாவோம். இன்ன கோத்திரத்தினரும் + தர்ப்பணம் செய்கின்றேன்.

ஆயந்து ந: பிதரஸ் ஸோம்யாஸோ ऽக்னிஷ்வாத்தா: பதிபிர் தேவயானை:। அஸ்மின் யஜ்ஞே ஸ்வதயா மதந்து அதிப்ருவந்து தே அவந்த்-வஸ்மான் ॥ கோத்ரான்—சர்மண: வஸு ரூபான் பித்ரூன் ஸ்வதா நமஸ்—தர்ப்பயாமி ॥ 5.3 ॥

5.3. அக்னிஷ்வாத்தர்கள்—அக்னிஷ்டோமம் முதலிய யாகங்களைச் செய்யாமல் சுருதிகர்மங்களை மட்டும் செய்தவர்கள்.

5 3. அக்னிஷ்வாத்தர்கள் என்பவர்களும், ஸோம யாகம் செய்தவர்களுமான நமது பிதிருக்கள் தேவயான மார்க்கமாக இங்கு எழுந்தருளட்டும். இங்கு நாம் செய்யும் ஆராதனையில் ஸந்தோஷமடையட்டும். நம்மைக் காப்பாற்றட்டும். இன்ன கோத்திரத்தினரும் + தர்ப்பணம் செய்கிறேன்

ஊர்ஜம் வஹந்தீ—ரம்ருதம் க்ருதம் பய : கீலாலம் பரிஸ்ருதம் ஸ்வதாஸ்த தர்ப்பயத மே பித்ரூன் ।।

கோத்ரான்—சர்மண ; ருத்ரரூபான் பிதாமஹான் ஸ்வதா நமஸ்-தர்ப்பயாமி ।। 6.1 ।।

6.1 (ஜலங்களே!) எல்லாவற்றிலுமுள்ள ஸாரத்தை நீங்கள் உங்களிடம் கொண்டிருக்கிறீர்கள். ஆகையால் அமிருதமாகவும், நெய்யாகவும், பாலாகவும், மதுவாகவும், பானகமாகவும் பரிணமித்து (எது வேண்டுமோ அதுவாய் நின்று நீங்கள்) எங்கள் பிதிருக்களைத் திருப்தி செய்வீர்களாக. இன்ன கோத்திரத்தினரும் இன்ன பெயருள்ளவரும் ருத்ர ரூபியுமாகிய எங்கள் பிதாமஹரை நமஸ்கரித்து அவருக்குத் தர்ப்பணம் செய்கின்றேன்.

பித்ருப்ய ; ஸ்வதாவிப்ய ; ஸ்வதா நம : । பிதாமஹேப்ய ; ஸ்வதா விப்ய : ஸ்வதா நம; । ப்ரபிதாமஹேப்ய : ஸ்வதா விப்ய : ஸ்வதா நம; ।। கோத்ரான்—சர்மண : ருத்ர ரூபான் பிதாமஹான் ஸ்வதா நமஸ்தர்ப்பயாமி ।। 6.2 ।।

6 2. 'ஸ்வதா' எனும் சொல்லால் திருப்தியடையும் பிதிருக்களுக்கு 'ஸ்வதா' எனக் கூறி நமஸ்கரிக்கிறேன். 'ஸ்வதா' எனும் சொல்லால் திருப்தியடையும் பிதாமஹர்களுக்கு 'ஸ்வதா' எனக் கூறி நமஸ்கரிக்கிறேன். 'ஸ்வதா' எனும் சொல்லால் திருப்தியடையும் பிரபிதாமஹர்களுக்கு 'ஸ்வதா' எனக் கூறி நமஸ்கரிக்கிறேன். இன்ன கோத்திரத்தினரும் + தர்ப்பணம் செய்கின்றேன்.

யே சேஹ பிதரோ யே ச நேஹ யாம்ச்ச வித்ம யான் உச ந ப்ரவித்ம । அக்னே தான் வேத்த யதி தே ஜாத வேதஸ் தயா ப்ரத்தம் ஸ்வதயா மதந்தி ।।। — கோத்ரான் சர்மண ; ருத்ர ரூபான் பிதா மஹான் ஸ்வதா நமஸ் தர்ப்பயாமி ।। 6.3 ।।

6 3. எந்த பிதிருக்கள் இவ்வுலகில் இருக்கின்றனரோ, எவர்கள் இங்கு இல்லையோ, எவர்களை நாங்கள்

அறிவோமோ, எவர்களை அறியமாட்டோமோ, அவர்களை எல்லாம், அக்னிபகவானே! நீர், அனைத்தையும் அறியும் ஜா த வே த ஸ் ஆதலால், அறிவீர். அவர்களுக்குரிய இதை அவர்களிடம் சேர்த்தருளவேண்டும். அதனல் அவர்கள் சந்தோஷமடையட்டும் இன்ன கோத்திரத்தினரும் + தர்ப்பணம் செய்கின்றேன்.

மது வாதா ருதாயதே। மது க்ஷரந்தி ஸிந்தவ:। மாத்வீர் நஸ்—ஸந்த்வோஷதீ; ॥ கோத்ரான் - சர்மண: ஆதித்ய-ரூபான் ப்ரபிதாம மஹான் ஸ்வதா நமஸ்-தர்ப்பயாமி ॥ 7.1 ॥

7.1. காற்று இனிமையாக வீசட்டும். நதிகள் இனிமையைப் பெருக்கிக்கொண்டு ஓடட்டும் செடி கொடிகள் இனிமையை அளிப்பவையாக இருக்கட்டும். இன்ன கோத்திரத்தினரும் இன்ன பெயருள்ளவரும் ஆதித்திய ரூபியுமாகிய எங்கள் பிரபிதாமஹரை நமஸ்கரித்து அவருக்குத் தர்ப்பணம் செய்கின்றேன்.

மது நக்த-முதோஷஸி। மதுமத் பார்த்திவம் ரஜ:। மது த்யௌரஸ்து ந: பிதா ॥ - கோத்ரான் - சர்மண: ஆதித்ய ரூபான் ப்ரபிதாமஹான் ஸ்வதா நமஸ்தர்ப்பயாமி ॥ 7 2 ॥

7.2 இரவும் காலையும் இனிமையாயிருக்கட்டும். பூமியின் புழுதியும் இன்பந்தருவதாயிருக்கட்டும். நமது தந்தை போன்ற ஆகாயம் இன்பமளிக்கட்டும். இன்ன கோத்திரத்தினரும் + தர்ப்பணம் செய்கின்றேன்

மது மாந் நோ வனஸ்பதி:। மதுமாம் அஸ்துஸூர்ய: மாத்வீர்-காவோ பவந்து ந:॥
கோத்ரான்—சர்மண: ஆதித்யரூபான் ப்ரபிதாமஹான் ஸ்வதா நமஸ்-தர்ப்பயாமி ॥ 7.3. ॥

7 3 வனவிருக்ஷங்கள் இன்பம் நிறைந்தவைகளாயிருக்கட்டும் சூரியன் இன்பந்தரட்டும், பசுக்கள் மதுரமான பாலையளிக்கட்டும். இன்ன கோத்திரத்தினரும் + தர்ப்பணம் செய்கின்றேன்.

கோத்ரா: (ஸீதா) தா: வஸுரூபா: மாத்ரூ: ஸ்வதா நமஸ் தர்ப்பயாமி (த்ரி:) ॥* 8.1. ॥

8.1 இன்ன கோத்திரத்தினரும் (ஸீதா) என்ற பெயருள்ளவரும் வசு ரூபிணியும் ஆகிய எனது தாயை

நமஸ்கரித்து அவருக்குத் தர்ப்பணம் செய்கின்றேன். மூன்று தடவை.

கோத்ரா: (லக்ஷ்மீ) தா: ருத்ர ரூபா: பிதாமஹீ: ஸ்வதா நமஸ்தர்ப்பயாமி (த்ரி:) ॥ 8 2 ॥

8.2. இன்ன கோத்திரத்தினரும் (லக்ஷ்மி) என்ற பெயருள்ளவரும் ருத்ர ரூபிணியும் ஆகிய எனது பிதாமஹியை நமஸ்கரித்து அவருக்குத் தர்ப்பணம் செய்கின்றேன். மூன்று தடவை.

* தாயார் இருப்பவர்கள் பிதாமஹீ, ப்ரபிதாமஹீ, பிது: ப்ரபிதாமஹீ மூவருக்கும் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

கோத்ரா: (ருக்மிணி) தா: ஆதித்யரூபா: ப்ரபிதாமஹீ: ஸ்வதா நமஸ்-தர்ப்பயாமி (த்ரி:) ॥ 8.3 ॥

8.3. இன்ன கோத்திரத்தினரும் (ருக்மிணீ) என்ற பெயருள்ள வரும் ஆதித்ய ரூபிணியும் ஆகிய எனது ப்ரபிதாமஹியை நமஸ்கரித்து அவருக்குத் தர்ப்பணம் செய்கின்றேன். மூன்று தடவை.

மாதாமஹவர்க்க :

கோத்ரான்—சர்மண : வஸுரூபான் மாதாமஹான் ஸ்வதா நமஸ் - தர்ப்பயாமி (த்ரி:) ॥ 9 1 ॥

9.1. இன்ன கோத்திரத்தினரும் இன்ன பெயருள்ள வரும் வசு ரூபியுமாகிய எங்கள் மாதாமஹருக்குத் தர்ப் பணம். மூன்று தடவை.

கோத்ரான்—சர்மண : ருத்ர-ரூபான் மாது : பிதா மஹான் ஸ்வதா நமஸ் தர்ப்பயாமி ॥ (த்ரி:) ॥ 9 2 ॥

9.2 ருத்ர ரூபியாகிய எங்கள் தாயின் பிதாமஹ ருக்குத் தர்ப்பணம் மூன்று தடவை.

கோத்ரான்—சர்மண : ஆதித்ய ரூபான் மாது: ப்ரபிதா மஹான் ஸ்வதா நமஸ்-தர்ப்பயாமி (த்ரி:) 9 3 ॥

9.3. ஆதித்திய ரூபியாகிய எங்கள் தாயின் ப்ரபி தாமஹருக்குத் தர்ப்பணம். மூன்று தடவை.

கோத்ரா : (கௌரீ) தா : வஸுரூபா : மாதாமஹீ . ஸ்வதா நமஸ்-தர்ப்பயாமி ॥ (த்ரி): ॥ 10.1 ॥

10 1. வசு ரூபிணியாகிய எங்கள் மாதாமஹிக்குத் தர்ப்பணம். மூன்று தடவை.

கோத்ரா: (பார்வதி) தா : ருத்ர ரூபா : மாது : பிதாமஹீ: ஸ்வதா நமஸ்-தர்ப்பயாமி (த்ரி:) ll 10.2. ll

10.2. ருத்ர ரூபிணியாகிய எங்கள் மாதாவின் பிதாமஹிக்குத் தர்ப்பணம். மூன்று தடவை.

*மாதாமஹ வர்க்கத் தர்ப்பணத்திலும் 'உதீரதாம்' முதலிய மந்திரங்களைச் சேர்த்துக் கொள்வது விசேஷம். மாதாமஹர் ஜீவித்திருந்தால் அந்த வர்க்கத்திற்குத் தர்ப்பணம் இல்லை.

கோத்ரா : (மீனாக்ஷீ) தா : ஆதித்ய ரூபா : மாது : ப்ரபிதாமஹீ: ஸ்வதா நமஸ்-தர்ப்பயாமி (த்ரி:) ll 10.3 ll

10 3. ஆதித்ய ரூபிணியாகிய எங்கள் மாதாவின் ப்ரபிதாமஹிக்குத் தர்ப்பணம். மூன்று தடவை.

ஊர்ஜம் வஹந்தீ-ரம்ருதம் க்ருதம் பய: கீலாலம் பரிஸ்ருதம் ஸ்வதாஸ்த தர்ப்பயத மே பித்ரூன் ll த்ருப்யத த்ருப்யத த்ருப்யத ll 10.4. ll

10.4 அன்னரஸமாகவும், அமிருதமாகவும், நெய்யாகவும், பாலாகவும், தேனாகவும், பானகமாகவும், பரிணமித்து (எது வேண்டுமோ அதுவாய் நின்று நீங்கள்) எனது பித்ருக்களைத் திருப்தி செய்வீர்களாக (பித்ருக்களே !) திருப்தியடையுங்கள், திருப்தியடையுங்கள், திருப்தியடையுங்கள்.

(உபவீதி) தேவதாப்ய : பித்ருப்யச்ச மஹா யோகிப்ய எவ ச ] நம : ஸ்வதாயை ஸ்வாஹாயை நித்யமேவ நமோ நம: ]l (ப்ரதக்ஷிணம் க்ருத்வா) அபிவாதயே நமஸ்கார :. ll 11.1. ll

11-1. (பூணூலை வலமாக மாற்றிக் கொள்ளவும்), தேவதைகளுக்கும் பித்ருக்களுக்கும் அவ்வாறே மகாயோகிகளுக்கும் நமஸ்காரம். 'ஸ்வதா' என்றும் 'ஸ்வாஹா' என்றும் பெயர் கொண்டு விளங்கும் பரதேவதைக்கு எப்போதும் மீண்டும் மீண்டும் நமஸ்காரம். (இங்ஙனம் மூன்று தடவை). அபிவாதனமும் நமஸ்காரமும்.

(ப்ராசீனாவீதி—பூணூல் இடம்). ஆயாத பிதரம ஸோம்யா கம்பீரை : பதிபி ; பூர்வ்யை: l ப்ரஜாமஸ் : ப்யம் தததோ ரயிஞ்ச தீர்க்காயுத்வஞ்ச சத-சாரதஞ்ச ll

அஸ்மாத் கூர்ச்சாத் வர்க்க-த்வய பித்ரூன் யதாஸ் தானம் ப்ரதிஷ்டாபயாமி ॥

11·2 (பூணூலை இடமாக மாற்றிக்கொள்ளவும். பித்ருக்களே ! மிகவும் நல்லவர்களான நீங்கள் எங்களுக்கு ஸந்ததியையும் செல்வத்தையும் நீண்ட ஆயுளையும் ஆசீர்வதித்து அளித்துக் கொண்டு கம்பீரமாகச் சிறந்த ஆகாசமார்க்கத்தில் எழுந்தருளுங்கள். இந்தக் கூர்ச்சத்திலிருந்து இரண்டு வர்க்க பிதிருக்களையும் அவரவர்களுடைய இருப்பிடங்களுக்கு எழுந்தருளப் பிரார்த்திக்கிறேன்.

(பவித்ரம் கர்ணே நிதாய । உபவீதீ । ஆசம்ய । பவித்ரம் த்ருத்வா । ப்ராசீனவீதீ ।) யேஷாம் ந மாதா ந பிதா ந மித்ர - ஜ்ஞாதி - பாந்தவ: । தே ஸர்வே த்ருப்திமாயாந்து மயோத்ஸ்ருஷ்டை: குசோதகை: ॥ (இதி கூர்ச்சம் விஸ்ரஸ்ய குசோதகம் நிநயேத் । பவித்ரம் விஸ்ருஜ்ய । உபவீதீ । ஆசாமேத் ॥ ப்ரம்மயஜ்ஞம் குர்யாத்) ॥ ॥ 3 ॥

11-3 (பவித்திரத்தை வலது காதில் வைத்துக் கொண்டு உபவீதியாக ஆசமனம் செய்துவிட்டு மறுபடி பவித்திரத்தைப் போட்டுக்கொண்டு பூணூலை இடமாக மாற்றிக்கொள்ளவும்.) எவர்களுக்குத் தாயோ, தந்தையோ, சிநேகிதரோ, தாயாதிகளோ, பந்துக்களோ இல்லையா (தர்ப்பணம் செய்ய) அவர்களெல்லாம் நான் தர்ப்பை நுனியால் விடும் தீர்த்தத்தால் திருப்தியடையட்டும் (என்று சொல்லிக் கூர்ச்சத்தைப் பிரித்து நுனி வழியாகத் தர்ப்பணம் செய்க பவித்திரத்தைப் பிரித்துப் போட்டு விட்டுப் பூணூலை வலமாய்ப் போட்டுக் கொண்டு ஆசமனம் செய்க. பின்பு பிரம்ம யஜ்ஞம் செய்க.)

பித்ரு தர்ப்பண விதி முற்றும்.



